அவ,ளுவகையாற்று துளத்தோடு கிளத்தல்.

டுட்டுக்கு வந்த விபத்தும் வராத தறிந்துமுலைக்
காட்டுக்கு வந்த விறுமாப்பு மாடவர் கூறுங்கல்விப்
ரட்டுக்கு ளான பயனுநெஞ் சேவிடப் பார்த்திபர்கைத்
தட்டுக் களிற்றியம் வேண்மயில் வெற்பைத் திடுக்கிட்டதே. ()

தலைவனைப் பாங்கி வாழ்த்தல்.

ரமரை மேற்பனை காய்த்தது நின்மேற் றமையிலன்போற்
மின் முடித்தலை சாய்த்ததும் வேண்மயிற் பொன்வரைநீ
ரமனு மாசி பிரதியும் போலக் கலந்ததுவு
மறிந் தோமண்ணை லையுது வோவின்னு நண்ணுவதே. (௩௩௪)

தலைவி, மணம்பொருட் டாக வணங்கைப் பராநிலை, காட்டல்.

ருமான் மருகன் பரங்குன்றின் வாய்த்தெய்வ யானைதனக்
காருமாலை யிட்டவன் றேருகை மயில்வெற் புறையண்ணலே
ருமாலை யந்தொழு மங்கையைப் பார்மறை மண்டலத்தே
ருது வெழும்பி யொருவு வரும்பா யிருந்ததுவே. (௩௩௫)

கண்டோன் மகிழ்தல்.

ன்னன் முருகுந்தன் சீர்கொண்டு போற்று மனமகிழ்வோன்
ன்னுந் தமிழ்செறி தோகை மலையினிற் பார்மனமே
ன்னும் புயனு மதியமும் பூவில் விளக்கிமல
ரனங் கடவுளை நம்மால் வணங்கு மருமையையே. (௩௩௬)

வரைவுமலிவு முற்றிற்று.

## இருபதாவது—அறத்தொடு நிற்றல்.

கையறு தோழி கண்ணீர் துடைத்தல்.

ந்திர னார்முடி யேற்றிக் கயிலைக் கெழுந்தருளி
ந்தவர் தோகை மலைச்சாரற் போந்த மயிலியலே
ந்திர காந்தக்கற் சாலையிற் றண்ணீர் தருதலென்னே
திரியில் லாத பகலே மதியெங் கமர்ந்ததுவே. (௩௩௭)

கலுழ்தற் காரணங்கூறல்.

ருக்கு வின்மையை வைத்தா ருறவை மனத்தெண்ணியோ
ரந் துயில்புரி யாத வெறுப்பை நினைந்துகொண்டோ
பருக்குப் பேரழ கீந்தருள் வேண்மயில் வெற்பிடத்திற்
ளிப்பாற் றுன்னவர் போலே கலுழு நயனங்களே. (௩௩௮)

தலைவன், றெய்வங்காட்டித்தெளிப்பத்தெளிந்தமை,யெய்தக்கூறல்.

கண்ணுன தாமரை வேலவன் மேற்செலக் காட்டியுயர்
விண்மீ திருதா மரைமலர் நீட்டி விரைந்தினிமேற்
பெண்ணே பிரியிற் பிரிந்தே னிசமென்று பேசினர்மற்
றெண்ணேர் தவறு மயில்வரை மீதி லிருந்தவரே. (௯௯)

இகந்தமை யியம்பல்.

அண்டர் பணிகும்ப மாமுனிக் கேதமி மூனவெல்லாம்
விண்ட குழகன் கடம்பன் மயில்வரை மேவுகொடைக்
கொண்டலன் னூர்கனி வாய்ப்பா லமுதங் குலாவிப்பன்
ளுண்டவர் வீட்டுக் கிரண்டகஞ் செய்தா னுரைப்பதென்னே. ()

(பாங்கிஇறைவனை) இயற்பழித் துரைத்தல்.

பார்மே லிறைவர்சொற் கன்மே லெழுத்தென்பர் பார்க்கிலது
நீர்மே லெழுத்தென வாயிற்றன் றேயிவர் நேர்நனவு
கார்மேல் விளங்கு முருகன் மயில்வெற்பிற் கந்தருவ
ரூர்மேன்மை யானது நீயன்ப ரென்பதென் றோவியமே. (௱௪௧)

(தலைவி) இயற்பட மொழிதல்.

முயக்கிடை யேவெளி காண வயர்ந்தது முன்னொருநாட்
கயத்திடைச் சொற்றதும் வேண்மயில் வெற்பர் கருதலர்மேல்
வயத்திடைச் செல்பவ ராரென்ற போது வருந்துயரு
மயர்த்திருப் பாரல்லர் தப்பாது மார்க்க மதிர்கடலே. (௱௪௨)

தெய்வம் பொறைகொளச் செல்குவ மென்றல்.

முருகா வுன்முன் சொன்னவார்த்தைதவிண்டாரென் றாமுந்தவெற்பி
லிருகாந்த ளேற்றிய துண்டே பொறுத்தரு ளென்றுசொல்லக்
குருகார் சரவணப் பொய்கையின் மூழ்கிக்குன் றக்குடிக்கே
திருகா மனச்சகி யேவிரை வாயின்று செல்குவமே. (௱௪௩)

இல்வயிற் செறித்தமை சொல்லல்.

காட்டின்மதித்துப்பொய்யாமொழிக்கூறுங்கவிதைகொண்டோன்
வீட்டினி லாறு படைவீட்டி னுண்மயில் வெற்பனையாய்
சூட்டிய மாலையுந் தோண்மாலை யுஞ்சொல்லுஞ் சோலையுநின்
மூட்டிய மாலையுங் கண்டன்னை யிற்செறிப் பாக்கினளே. (௱௪௪)

சேவிலி, கனையிரு ளவன்வரக் கண்டமைகூறல்.

கத்தூரி மிஞ்சிய நீற்றிலை சேர்பழுக் காய்ச்சுருட்டு
வைத்தாய் மலர்மெத்தை மீதுகொண் டன்னை மனத்துயிர்த்தா
ளொத்தா மெனவெண்ணி வேண்மயில் வெற்பி லிவிளின்று
முத்தார மும்வெற் றிலைச்சிட்டுங் கண்டு முனிந்தனளே. (௱௪௫)

### எறிவளை வேற்றுமைக் கேது விஞதல்.

சய்யவன் வேலன் மயில்வெற்பின் மன்னர் சிறுமிக்கின்றே
மய்யுறு வேதனை நேரென்னி லன்னம் விருப்பமில்லைக்
கயில் வளை யில்லை பாலென் றெவருங் கருதினரே
பயமுண் டாய தவள்பாங்கி யாமென் னருண்மகளே. (ருசசு)

### வெறி விலக்கல்.

ாக முருத்தென் கிழக்குறு தேவின் றுயர்குறியாய்
கன மான கடாய்க் கின மென்ன மனத்தெண்ணிலாய்
றுவென் ருர்த்தனை குன்றக் குடியிற் குமரவெங்கள்
ளா மாஹுன்னை நம்பின பாவநன் ருகியதே. (ருசஎ)

### வெறி விலக்கியவழி விஞதல்.

ருகன் பாசு பதத்தைக்கை யேந்திய சாமியையம்
ாருக ணுைப் புகன்ருனை நாணைப் புகல்வதென்னே
ாரு மயில்வரை மேஹுள்ள வார்த்தை யுரைபெறுகுல்
ரங்கொ ளன்னைக் குறையா தொளித்தன் மரபல்லவே. (ருசஅ)

### பூ, ஏதுவாகத் தலைப்பாடியம்பல்.

ருடம்பூத மைந்த ஹுருவான சூரைப் பிளந்தடியார்
ம்பூசை பெற்றவன் மாயூர வெற்பிற்றை யற்களியே
ருந்தாைப் பைங்குழல் பற்றி யிழுத்துப் புகமுடித்து
ந்தா வுரைசொற் றிருந்தா ரொருவர் மனமகிழ்ந்தே. (ருசகூ)

### புனல், ஏதுவாகத் தலைப்பாடியம்பல்.

ரபகை யாக வரிபட்ட பூக்கண் முகிழ்நகையைத்
பகை தீர்க்கவம் பிற்கொல்லு நாளித் தரணியிலோர்
பதி மேலவர் கையிற் குழல்கொண்டு வேட்டெழுப்பி
புதல் விக்குயிர் தந்தார்செவ் வேண்மயிலோங்கலினே. (ரு௫0)

### களிறு, ஏதுவாகத் தலைப்பாடியம்பல்.

றுைக் கமுதெனும் வேண்மயில் வெற்பிலொர் காவலர்நம்
ண்ணிற் கருப்போர் மதயானை வாய்ப்படப் பின்னளித்தார்
ரணி லெழும்புங் கலைகள்பின் போயது வெய்யபணி
றுமவ் வேளை கரிமலை வச்சிர நாந்தகமே. (ரு௫க)

### மின்னிடை வேற்றுமை கண்டுதோய் விஞதல்.

விற்சங் காமலை மேற்றேன் றியபிறை யாய்ந்திலைசெய்
ிற்சங் கோதையுங் காண்கிலை சோர்துகில் காண்கிலைகோன்
ிற்சங் கோதை மகிழ்வதுஞ் செவ்வேண் மயில்வரைமே
ிற்சங் கோதை குறிப்பதும் பாரா திருந்தனையே. (ரு௫உ)

### செவிலி, முன்னிலை மொழியால் மொழிதல்.

அண்ணாந் தாங்கி மதியுடன் பாட்டியெலா மாண்சிங்கநம்
பெண்ணை மத்தகஞ் செங்கை நகந்தாற் பிளந்ததுண்டாங்
கண்ணன தெய்வ முருகன் மயில்வரைக் காரிகையே
யுண்ணா துறங்கா தெதிர்சிங்க நோக்கநெஞ் சோர்கின்றதே. ( )

அறத்தொடு நிற்றல் முற்றிற்று.

---

## இருபத்தோன்றாவது—உடன் போக்கு.

---

### டாங்கி தலைவற் குடன்போக் குணர்த்தல்.

அஞ்சப் படையஞ் சனுப்பிவெஞ் சூர னணியையவெஞ் சூரன்
மஞ்சிற் பொலியு மயில்வரை காக்கின்ற மன்னவரே
செஞ்சொற் கிளியையுன் பூங்கா வனத்திற் செறித்தனன் முருங்
கொஞ்சத் தனத்துக்குக் கொஞ்சந் தனக்கைத் தொடாவுமரே.

### ஆங்கவன் மறுத்தல்.

இரண்டு தனக்குடம் பீய மனுட ரிருக்கவுநீ
முரண்பட வார்த்தை மொழிந்தனை நிற்க முதியவினின்றோர்
சரண்புகுஞ் சாமி மயில்வெற்பிற் றமரை யறுத்திடுமோ
வரண்புரம் போகுமுன் மாந்தளிர் மேன்முத் தரும்பிடுமே. ( )

### அவளுடன் படுத்தல்.

இனத்திற் செறிந்த விவள்புத்தி சாலியென் றின்னுமெண்ணிர்
கனத்திற் பொலிந்த முருகன் மயில்வரைக் காவலரே
யனத்திற் செறிநடை யார்நல்ல கான மகல்வதுண்டோ
வனத்திற் படாததுண் டோதா மரைதும் மகிழ்ச்சியுண்டே. ( )

### தலைவன் போக்குடன் படுதல்.

கல்லுஞ் சரிமல ருஞ்சரி வேண்மயிற் கார்வரைமேற்
புல்லுமுள் ளுஞ்சரி சேர்ந்தேகி லென்று புகன்றதுண்டே
யொல்குங் கிளிக்குத் தினைசாமை காட்டியவ் வோர்புறந்தே
நெல்லுங் கனியுந் தெரித்தமு தூட்டிநின் றேகுவனே. (௧௫௭)

### பாங்கி, தலைவிக்குடன்போக்குணர்த்தல்.

தனத்திற் சிறந்தவர் கைபாலை யாழிற் றடைவந்தநா
ளுனக்கவ ரென்றும் பிரியா திருப்ப துசிதமன்றோ
வனத்திற் குமரிக்கு வேண்டுதல் செய்ய மயில்வரைவேள்
புனத்திற் குமரி வரவேண்டு மென்றும் புகன்றனரே. (௧௫௮)

### அவன்சுரத் துய்த்தல்.

மாலி லரவம் புரியார் விடையில் வருபவர்பொன்
மேலி லரவம் புரிவார் மகன்மயில் வெற்பனையாய்
பாலி லரவம் புலியுண்டு பாம்புண்டு பையநட
காலி லரவமில் லூரி லரமத்தைக் காட்டிடுமே. (௱.௬௬)

### அசைவறிந் திருத்தல்.

நேத்திர மூன்றுடை யான்மக னென்று னிணைவில்வந்து
பாத்திர மாக்கொண்ட வேண்மயில் வெற்புறை பைங்கொடியே
காத்திரந் தேற விரைந்துநன் னீரிற் கலந்துளாத்தோர்
மாத்திரை செல்லிற் சுரமாறும் பின்னை வழிநலமே. (௱.௬௭)

### உவந்தலர்சூட்டி யுண்மகிழ்ந்துரைத்தல்.

பணமுடி யாரன் பனைமுடி யார்வன் பனைமுடிப்பார்
குணமுடிப் பார்கருஞ் செவ்வேண்மயில்வெற்பிற் கொம்பரன்னீர்
கணமுடை யாரென நின்றேமிக் காட்டினிற் காரிகைநும்
மணமுடி யார்கத் திகைகொள்ள வந்த மகிழ்ச்சிநன்றே. (௱.௬௮)

### கண்டோரயிர்த்தல்.

பண்ணா யிரங்கொண்டு தும்புரு நாரதர் பாடவிரு
பெண்ணார் விரும்ப வெழுந்தருள் காட்சிப் பெருமையுள்ளான்
றண்ணார் மயில்வெற்பி லிந்த்ராணி யென்னிற்கண் டானிமைக்குங்
கண்ணா யிரமில்லைத் தேவேந்த்ர னென்னக் கருதிவர்க்கே (௱.௬௯)

### காதலின் விலக்கல்.

ஆறோ பெரிதா றலைப்போர் கொடிய ரலைகடல்போ
லூறோ வளவின் றனிச்சம்பொ ருதுள்ளங் கானுவட்கு
வீறோது மாயை மகனைவென் றோன்மயில் வெற்பண்ணலே
பேறோதெம் மூரலர் மாளிகை வைகுந்தம் பின்செல்கவே. (௱.௭௦)

### தன்பதியணிமை சாற்றல்.

பகர்தேவி பட்டணம் விட்டுவந் தாற்றிருப் பாலைக்குடி- [டோ
மிகுசேது மார்க்கமென் றெண்ணலல் லாலெண்ணம் வேறுமுண்
புகவே சிறுவயல் விட்டாற் பெருவயல் பூம்பொழில்கண்
மிகவே தெரியுங்குன் றக்குடிக் கோவினும் வேலையுமே. (௱.௭௧)

### தலைவன், தன்பதியடைந்தமை தலைவிக்குணர்த்தல்.

அன்னை யெனும்பிணி யில்லாத காட்டி லருங்கிளியே
யுன்னிகர் கின்ற சரவணப் பொய்கை யுதுசுவர்க்கந்
தன்னிகர் கின்றசெவ் வேண்மயில் வெற்பிது தண்களப
மின்னிகர் பொன்னுலகைவெள்ளி யாக்கிய வீடிதுவே. (௱.௭௨)

உடன்போக்கு முற்றிற்று.

—o—

# இருபத்திரண்டாவது—கற்பொடுபுணர்ந்த கௌவை.

பாங்கியை வினவல்.

பங்கெடுத் தாய்பே ருயிர்ப்பெடுத் தாயொர் பயிலெடுத்தாய்
கொங்கெடுத் தாயங்கு மிங்குஞ்சென் றுய்பவங் கொள்கடலில்
வங்கெடுத் தாண்டவன் சேந்தன் மயில்வரைக் குன்கிளிதான்
எங்கெடுத் தேசெல்லுங் கோவை யுறுமெனிற் செப்பினியே. ()

பாங்கி செவிலிக் குணர்த்தல்.

ன்றே தருமிந்த மாலையென் றுடைர நான்புகுந்தே
என்றே பழைய வரைநினைந் தோவெனை யன்பிகந்தோ
சென்று டிரும்பினன் காணேன் முருகன் செயலிதென்றே
ன்றேன் மயில்வரைக் கூகை யிரட்டு நெடுஞ்சுரமே. (௬எ௪)

இனைய லென்போர்க் கெதிரழிந்து மொழிதல்.

சால்விலங் கிட்டதல் லானுன் வளர்த்த துரைப்பிடிக்கு
பல்விலங் கொன்றுசம் பாதிக்கி லோம்விரை வாய்ப்புகுந்தாள்
நல்ல விளையும் பயிர்க்கிந்தப் போக்கு முளைத்ததென்றுற்
செல்வஞ் செறிகின்ற குன்றக் குடியான் செயலிதுவே. (௬எரு)

தன்னறி வின்மை தன்னைநொந் துரைத்தல்.

இரவு தவிர்ப்பது நன்றேயென் றுளிந்த வேந்தலிற்போய்
பரவினை யாட வருள்செயென் றுள்வேண் மயில்வரையார்
ரவி லொடுங்கவர் கள்ளரென் றுள்சொற் கருதிலன்யா
வுரமதிற் சாய்ந்தினிப் பாலை யுதவென்று மோதினளே. (௬எ௬)

தெய்வம் வாழ்த்தல்.

கரத்தி லேவை லடியென்றல் பண்ணை பகரும்விதை
கிழ்கின்ற தாய்போல் வருமாறு செய்வி மயூரகிரி
மகிழ்நகை வள்ளி கணவர் தலைவரை முன்னிமணந்
தாருமலர் மாலை யிருகோங் கலர்த்திய தோகையையே. (௬எஎ)

செவிலியறத்தோடு நிற்றல்.

டியானைக் கொம்பொரு நான்குபின் பாகிடப் பின்றொடர்ந்த
டியானைக் கொம்புமுந் நான்கினின் றுனைத் துறந்துநமர்
டிமீது வேற்று மணநினைந் தானம்மிற் பற்றுமுண்டோ
டியாரை வாழ்விக்கும் வேண்மயில் வெற்பினம் மாயிழைக்கே, ()

பாங்கி தன்னொடு புலம்பல்.

பரப் பொருந்திய துன்றுய்க் குறைத்தனை யன்றெனக்கே
சரச்சொற் றுயில்லை வேலன் மயூரச் சிலம்பிலெம்மை
பிரிற் பகைத்துடி பார்க்கவைத் தாயுன் னுறவினளைப்
ாரிற் பகைத்துடி பார்க்கவிட் டாயென்ன பாவமிதே. (௬எ௮)

அ

பாங்கியர் தம்மோடு புலம்பல்.

தேவையை மேற்கொண் டெழுந்தாலும் போம்பொருள் சேர்த
பாவைய ரேவேண் மயில்வெற்பி னென்ன பகர்வதியா[னுண்டோ
னேவு நிகர்க்கண்ணி யைநோக்கி நீங்க லிரங்கலென்னே
கோவை விரும்பிப்பின் பாலை யிகழ்தல் குணமல்லவே. (௧அ0)

அயலார் தம்மோடு புலம்பல்.

இரவே யிருபூ மலர மதியை யெமக்கொளித்து
வரவே புரியும்வெய் யோனை யழைத்து மதிகொடுத்து
விரைவாய் நடந்தனள் வேலன் மயில்வரை மெல்லியலி
ரரவே யிழந்த மணிபோல வாடி யயர்ந்தனமே. (௧அ௧)

பயிலிடந் தம்மோடு புலம்பல்.

மாவே வடுக்கொள் பலாவே கனிகனி வண்டன்முல்லைக்
காவேகண் ணீர்சொரி யாறே யிரைகூனை கான்றமணைப்
பூவே தலைகவிழ் மென்கொடி யேவனம் போய்நடுங்கு
தேவே யுறைமயில் வெற்பாளை யானெனத் தேடிக்கொண்டே. ()

நிமித்தம் போற்றல்.

ஒருங்கடி சிற்குவை தானஞ்செய் வாரொரு கோடிகற்றப்
பெருங்கடி போனு முருகன் மயூரப் பிறங்கலிலே
யருங்கடி யாமென்றன் காவலை நீத்தா ளணையச்செய்தாற்
கருங்கொடியேவரும்பொன்கொடியாற்றின் னுங்காய்க்கொடியே.

சுரந்தணி வித்தல்.

நேசித்த பாதையி ராமீ சுரவழி நேருநம்வல்லோர்
யோசித்த பாம்பனந் தங்காண லாம்வே யுகுத்தமுத்த
மாசித்த பூமகள் கொப்புள மாங்கதி ராந்தெய்வநீர்
பூசித்த வேண்மயில் வெற்பாரைக் காப்பது புண்ணியமே. (௧அ௪)

தன்மகள் மேன்மைத் தன்மைக் கிரங்கல்.

பன்னீரில் லாச்சந் தனம்பார்க்கில் வெப்பாம் பதயுகள
மென்னேவொர் நாளனத் தூவி யெனச்சிவப் பெய்தியமா
னன்னீர்கொள்வேண்மயில்வெற்பிற்சுனைமொண் டநல்லதண்ணீர்
வெந்நீரென் பாட்குக் குளிர்நீர்மை யானதென் வெஞ்சுரமே. ()

இளமைத் தன்மைக் குளமெலிந் திரங்கல்.

வேங்கைத் துறுகற் புலிப்பற ழென்று வெருவியையர்
பாங்கர்வந் தீட்டி கொடுக்கு மிளமைப் பருவத்திறை
நீங்கிருள் யாமத்து வேண்மயில் வெற்பைத் துருவினளாங்
கோங்கரும் பாது தளவும்வின் னாது குறமுளைக்கே. (௧அ௬)

அச்சத் தன்மைக் கச்சமுற் றிரங்கல்.

பங்காளும் வள்ளியென் றுப்தேவ குஞ்சரி பால்விருப்பார்
மங்காத வாசக் கடம்பார் மயூர வரையினிலே
சங்கீத மேளந் தனுரென்ற போதுள்ளந் தானஞ்சுவாள்
வெங்கா ருடலத்த நாகங்க ளோசிக்கின் மெய்ந்நடுக்கே. (௩.அ௪)

கண்டோ ரிரக்கம்.

தாகத்தி னாற்சென்று பாங்கிய ராற்றிற் றலைப்படச்சூழ்
போகத்தி னார்சொல் விடியே முழங்கப் பொருதநற்று
யாகத்தின் கண்மழை சோனைய தாக வகனுங்கொல்லோ
மேகத்தின்பான்மின் னுப்போலச்செவ்வேண்மயில்வெற்பிடத்தே.

ஆற்றுத் தாயைத் தேற்றல்.

வானத்திற் செல்வன் பரவையி னூடி வருவளிந்தக்
கானத்தை வெற்பைத் தருவில மேறையண்டு காதிற்பட்டி
நான்வைத்த வேவரை யிவர்மாறி வைக்கினுந் தான்கொணர்வன்
ஞானக் குமரன் மயில்வரை வேந்த னனனல்லவே. (௩.அ௬)

ஆற்றிடை, முக்கோற் பகவரை வினுதல்.

படையவர் முன்செல்லப் பின்படைந் தாளொரு பாவைமயி
லுடையவர் வேண்மயில் வெற்பகல் வாரினுன் போகண்டது
டையவ ரேகையின் முக்கோல்கொண் டுய்வா னடையவரே
தடையவ ரேயறக் கூனி யமுது முடையவரே. (௩.௯0)

மிக்கோ, ரேதுக்காட்டல்.

பெண்ணுன் பிரிந்தான் பிரிந்தா னெனச்சொற் பிதற்றிவந்தார்
கண்ணோடு காட்டினில் வீணே யலைவதென் வேலெடுத்தோர்
மண்ணோடும் போற்றுங்குன் றக்குடி யாப்பரு வத்தொருவ
னண்ணுத கேளி சவைபெறு மோவிவ் வுலகத்திலே. (௩.௯௧)

எயிற்றியோடு புலம்பல்.

மகம தேறிய வெண்பிறை போற்கொடு வேங்கைநக
மாகையிற் குடு மெயினர்பெண் ணைமயி லோன்முருகன்
சாகமி லாத மயில்வரை யிதொரு தோகையுமோர்
நகமுங் கூடி விளையாட னுண்டோ நகினுமையே. (௩.௯௨)

குரவோடு புலம்பல்.

குவார் குழையணிந் தாய்பூங் கொடியிடை வாய்க்கணைபூங்
குவா யிணைமுரு கோன்மயில் வெற்பிற் செழுங்குரவே
குகா னடையும் வளைக்கையுந் சொல்லுமில் லாவியப்பா
பாருபாவை காட்டியொர் பாவையைக் காட்டாதுணர்வல்லவே.

சுவகேண்டிரங்கல்.

திரண்ட குமரியைக் கைப்பற்றி னூர்சுரத் தீவலஞ்செய்
தரந்தரு சேந்தன் மயில்வெற்பை நீங்கின ருற்றவர்கா
லிரண்டடி நாலடி யாகிய தேபெண் ணிரண்டடிதா
னரண்புகு மெட்டடி யாகிய தேசெய்ய லாவதென்னே. (கூகூச)

இதுவுமது.

எங்குஞ்செந் தாமரை மேற்று மரையுற் றெதிர்கடம்பு
குங்குமஞ் சந்தங் கொழுந்து மணத்தாற் குளிர்ந்தனவாற்
றங்கு புறவடி மீதுசெங் கைகொண்டு தாங்கியபோ
தங்க விணையடி யீதுசெவ் வேண்மயி லார்வெற்பிலே. (கூகூரு)

கலந்துடன் வருவோர்க் கண்டு கேட்டல்.

உடம்புமுன் னாக வுயிர்பின் னுருவெடுத் துற்றதுபோ
லிடம்பெறுகொங்கையொருவேந்தன்பின்னடந்தேகலுண்டோ
குடம்பைதன் வீடெனப் புட்போற் குகன்மயிற் குன்றிடத்தே
நடந்தவர் போல் வரு வீர்நும் வரத்து நலந்தந்ததே. (கூகூகூ)

அவர், புலம்ப றேற்றல்.

சுவர்ப்படு பந்தென மீடிமின் னேயவர் சுந்தரனார்
தவப்புதல் வன்முரு கேசன் மயில்வரை சார்ந்தவர்போ
லுவப்பின ராகி மருவ லரைமுடித் துற்றுதவிக்
கவற்சியில் பேரின்ப மேவ நகர்ப்புறங் கால்வைப்பரே. (கூகூஎ)

புதல்வியைக் காணாது, கவலை கூர்தல்.

விண்ணாட்டு மங்கைய ரான் மாடி யாடியின் மெய்ம்மறைக்கு
மண்ணாட்டு மாதர் திகழ்வேண் மயில்வெற்பின் மற்றெனகண்
கண்ணோர் குராவு மராவு மராவுங் கராவுமென [டேன்
துண்ணோ ரிராவுங் கலையுங் கலையுமென் னுள்ளமுமே. (கூகூஅ)

கற்பொடு புணர்ந்த கோவை முற்றிற்று.

---

## இருபத்துமூன்றுவது—மீட்சி.

---

தலைவிசே ணகன்றமை செவிலிதாய்க் குணர்த்தல்.

மாதெனச் சென்றோர் மயில்தொடர்ந் தேனது வான்பறந்த
போதொரு மானைத் தொடர்ந்துசென் றேனது போனதுகாண்
வீதி செறிமயில் வெற்பார் செயலென்று மீண்டனன்யான்
போதல்செய் யாதது வானே யவர்சேண் பொருந்தினரே. ( )

தலைவன் றம்மூர் சார்ந்தமை சாற்றல்.

வையா புரியுஞ் சரவணப் பொய்கையும் வாயில்செறி
கையா திரண்டுடை யான்கோயிற் றேரைக் கனங்கிரியு
மய்யா னமுருக ரும்வீர வாகு வுடனிடும்பன்
மெய்யான சன்னிதி யும்பா ரிதுநம் வியனகரே. (௪00)

தலைவிமுன் செல்வோர் தம்மோடு தன்வரல்,
பாங்கியர்க் குணர்த்தி விடுத்தல்.

பந்தடி போற்பா விடையா டியகுழற் பண்பினைப்போ
லுந்து மிருவினை யாற்போகந் துய்ப்பா ருடம்பினைப்போல்
வந்து திரும்பிய பாங்கியர்க் கேவேண் மயில்வரைமேற்
சந்தடி பார்த்து வரல்கூறும் வேதத் தலைவர்களே. (௪0௧)

ஆங்கவர், பாங்கியர்க் குணர்த்தல்.

நல்லதண் ணீரள்ளி யுண்ணு தவரில்லை நன்மலைரை
யெல்ல வருமுடிப் பாரத னலென் னிரங்குதனீர்
வல்விகொள் வேண்மயில் வெற்பி லிருவருங் காடன்செட்டி
செல்வ மணிமண் டபப்படி பார்த்துத் திரும்பினரே. (௪0௨)

ஆங்கவர் கேட்டு, நற்றாய்க் குணர்த்தல்.

முன்னை யெமையிந் நகரார் துணையற் றவரெனவே
சொன்ன பழிமொழி போயின வாற்சுரம் போமிருவர்
தன்னகுன் றக்குடி வேளை வணங்கி மருதுதுரை
மன்ன தரண்மனை யிற்புசித் தேவரல் சாற்றினரே. (௪0௩)

நற்றாய் கேட்டவ, னுளங்கோள் வேலனை வினுதல்.

மயில்வரை வேலன் வருவரென் றோதி வருமுருகா
யது மொருமின்னுங் காட்டி னடந்த புதுமையுண்டே
யலவர் காண வகமெய்து மோவயல் வீடெய்துமோ
சயல்பெற்ற மின்னைத் தருமோவின் றேவிது செப்புகவே. ()

மீட்சி முற்றிற்று.

---

## இருபத்துநான்காவது—தன்மனைவரைதல்.

பணிமொழி நற்றாய் மணனயர் வேட்கையிற்,
சேவிலியை வினுதல்.

ராம விருக்கினு மோர்வீட்டுள் ளார்பிறர் மாடத்திலே
ராம விருப்பர் குகன்மயில் வெற்பி லிதுவளமாந்
ராதுகொண் டார்பின் கொடாதுசென் றூர்வந்து சார்ந்திந்தவூர்
ராவ மணங்கொண் டிலர்கா வலரென்ற பான்மைநன்றே. ()

### செவிலிக்கிகுளை, வரைந்தமை யுணர்த்தல்.

சொன்மாலை கொண்டபுலவர்க்குச்சேர்ந்தன்பைந்தோகைவெற்பி
னன்மாலை பைம்பொ னறுந்தூசு தண்டிகை நல்லுணவா
னென்மாலை யீந்து தலைநா ணிகர்நா ணிலைசெய்துநம்
பொன்மாலைக் கேமணந் தந்தாரென் றேற்றர் புகன்றனரே. ()

### வரைந்தமை செவிலி, நற்றாய்க் குணர்த்தல்.

அருணிதிப் பாலினு மேற்பா ரினுமறி யாமையினான்
மருது துரைபணி சேர்ந்தன் மயூர வரைத்திருவே
யிருவரை யேந்தி யொருவரை யுட்கொண் டிருந்தவளோர்
வரைதலை மேற்கொண் டனளென்று வெஞ்சொல் வழங்கினளே.

### உற்றாங்கிருவரும், தலைவியில் வந்துழி தலைவன் பாங்கிக், கியான்வரைந் தமைநுமர்க் கியம்புசென் றென்றல்.

குன்றக் குடிக்குமரேசன் பதத்தருள் கொண்டுநன்று
மன்ற னடந்தது சோலையில் லாமலென் மானையருண்
மின்றகு நுண்ணிடைக் கோது சனத்தை விளம்பவந்தே
வொன்றியநீயெனுங் கொம்பில்லைத்தப்பென்பதொன்றில்லையே. ()

### தானது முன்னே சாற்றிய துரைத்தல்.

வெப்புற்ற கார்வலம் பார்க்கின்ற நாடவிம் மெல்லியலைக்
கைப்பற்றி யேகல்கல் யாணமன் றேவின்று கைப்பற்றின
ரொப்பற் றவரென்று சொல்வதென் வேண்டமயி லோங்கலிவ்வூ
ரெப்பக் கமுமுரைத் தாரெங்கள் போனுன்கை யேற்றவரே. ()

### இதுவுமது.

நானுரைத் தேன்முன்ன மன்றித் தமிழ்கொண்டு நல்குவெகு
மானமுந் தோகை மலைக்குமரேசர்முன் வைத்தவன்ன
தானமு மஞ்சளும் வாசியும் யானையுந் தையனல்லார்
தேன்மொழி யுங்கண் ணுங் கைகாலு மூரெங்குஞ் செப்பினவே.

தன்மனை வரைதல் முற்றிற்று.



## இருபத்தைந்தாவது—உடன்போக்கிடையீடு.



### நீங்குங் கிழத்தி பாங்கியர் தமக்குத், தன்செல வுணர்த்தி விடுத்தல்.

அன்பினிற் காத்தவர்க் கேகாணிக் காசை யளித்தனன்பின்
வன்சொற் செவிலிக்குக் காற்கா சளித்தேன் வருபவரே
துன்குர வற்கொரு காசளித் தேன்குகன் றோகைவெற்பி
லென்செல வீப்படி யானதென் றோதிடு மேழையர்க்கே. ()

### தலைமகள், தன்செல வின்றூட் குணர்த்தி விடுத்தல்.

மைக்குயில் கூவ மதன்வருஞ் சேந்தன் மயில்வரைமேற்
கைக்கிளிக் கன்னத்தை யூட்டச்சொல் லீர்கலைக் கேபிடிசேர்த்
திக்கணம்பச்சைப்புன்னீட்டச்சொல் லீரெங்களன்னையைப்பூங்
கொக்கைக் குயிலுக்குக் காட்டச்சொல் லீர்நடக் கும்பலரே. ()

### என்றூட் கந்தணர் மொழிதல்.

ஓட்டித் திருட்டைவி சாரித்தி டாம லொருத்தரிடங்
கட்டிக் கொடுக்க நினைத்தத னாலிவள் காட்டொளித்தாள்
செட்டிப்பெயர்கொண்ட வேண்மயில் வெற்பினுன்செங்கைக்கிளி
யெட்டிப் பழந்தின்னு மோகொள்ளுங் கோவை யிகழ்ந்தினியே.

### என்றுள், அறத்தொடு நிற்றலிற் றமர்பின் சேறலைத், தலைவி கண்டு தலைவற் குணர்த்தல்.

சந்தன கொங்கை யறத்தொடு நின்றிடும் பாவிசொல்லா
லெந்தை யிடத்தன்னை சொன்னுள்கொ லேந்த லகத்திருக்குஞ்
சந்தனஞ் சுற்றிய வத்தியு மாவுந் தழையரசுங்
கந்தசு வாமி மயூர வரைசூழ் கடம்படர்ந்தே. (சுசுசு)

### தலைமக டன்னைத் தலைமகன் விடுத்தல்.

உருக்கு மணியைத்து வாரகை யான்கொண் டுடன்செல்லுநாட்
டுருக்கு மவனுக்கு முன்னேனைக் கட்டிய தேரிதன்றே
நெருக்குமுன் றன்னைக்குந் தந்தைக்குஞ் சேனைக்கு நேசமுன்னா
யிருக்குமன் றேகந்தன் மயூர வெற்பினி லேந்திழையே. (சுசுரு)

### தமருடன் செல்பவ ளவன்புற நோக்கிக், கவன்றரற்றல்.

போர்புரிந் தாற்புரி யென்றூர் குகன்மயிற் பொன்வரைமே
லூர்பிரிந் தாரிப் படிச்சேலை சுற்ற வுன்னிகொடிசேர்த்
தார்புரிந் தாரினை வாழையுங் கட்டியுள் ளாமெனது
தார்பிரிந் தாரினத் தேரே திரும்பு திரும்பினியே. (சுசுசா)

உடன் போக்கிடையீடு முற்றிற்று.

---

## இருபத்தாறுவது — வரைவு.

### சென்றோன் மீண்டுவேந்து அந்தணரை (முன்னிடல்.)

மயிரண் டாறுடை யான்மயில் வெற்பிற் கவன்றதுகண்
மகலை யெண்ணித் தமரொடும் பேசி யொருவர்தள்ளா
மையரை மேனியந் தாலுயிர் போல வமைந்ததுணை
மைப்புறு நாலையை மேவ விவற்கு மிகவெளிதே. (சுசுன)

சான்றோரை முன்னிடல்.

திக்கோ ருடன்புவி யோரு மமரருந் தேடத்தக்க
தக்கோருந் தேடும் விசாகன் மயில்வரைச் சாரலிலே
புக்கோ ருரைத்தசொற் றப்பா ருடனே புகுந்தனரான்
மிக்கோரை நோக்கியன் றேசெய்கு வார்மண மேலவரே. (சகஅ)

அருங்கலந் தருதல்.

சேலாகு மாயன் மருகன் மயூரச் சிலம்பிடத்தே
மேலாநம் மைய ரிறைபோ னளித்த வியன்கனக
மாலார் சரப்பணி சொன்ன வளைமுத்து மாலைகொள்ளுங்
காலாழி கண்டன ரோராழி போலக் கலித்தனரே. (சகக)

வரைந்துழிக் கண்டோர் மகிழ்ந்து கூறல்.

சங்கமுங் கைப்பற்றித் தீவலஞ் செய்த தகையுஞ்செங்கை
கங்கைப் புனல்வைத் ததுமாவுந் தேருமுன் கண்டனமே
மங்கல வேண்மயில் வெற்பின் மழுவில்லை மானுமில்லை
யிங்கிவ ரீசனன் றேமங்கை பாக மிசைந்தனரே. (சஉ0)

வரைவு முற்றிற்று.

---

# இருபத்தேழாவது—இல்வாழ்க்கை.

---

தலைவன் தலைவிமுன் பாங்கியைப் புகழ்தல்.

காவேந் தியகுழல் கண்ணுஞ்செங் கையுங் கதிர்நகையு
மாவேந்தர் பொன்னும் பெரியோரு மிவ்வண்ணம் வைத்ததின்றே
பாவேந்தர்க்கன்பன் குகன்றேகை வெற்புறை பாவையென்கைப்
பூவேந்து முன்கையன் றேவிந்த வண்ணம் புரிந்ததுவே. (சஉக)

தலைவனைப் பாங்கி வாழ்த்தல்.

கதிர்மதி போலென் றுங் கன்னி தொடர்சிங்கங் காணுமென் றும்
விதியினிற் சொற்றனிர் வீண்வார்த்தை யின்றி விளைத்தல்செய்தீ
ரெதிருற்ற வேண்மயில் வெற்பி லிராமனென் றேயிசைந்த
மதுர மொழிநிலைத் தீர்மன்ன ரென்சொல்வளர்த் தனிரே. (சஉஉ)

தலைவியை, வரையு நாளளவும் வருந்தா திருந்தமை,
உரையா யென்றல்.

ஆர்வீட்டின் மன்றலென் றூர்மெலிந் தாய்பின் னறுபதுநா
ளோர்வீட் டிருந்தனை நீங்கா திருப்பதை யுன்னியநீ
கார்வீட் டிலாவுங் குகன்மயில் வெற்பர்பின் காட்டல்கண்டு
பார்வீட் டிறங்கினை யாவியெங் கேவைத்துப் பார்த்தனையே. ()

பெருமகளுரைத்தல்.

பொருந்திட மூண்டண்மை யுண்டு துணையுண்டு பொய்களுண்டு
விருந்தூண் டியமுமுண்டு சங்குண்டு தேருண்டு வேட்கையென்று
திருந்திடு நீயுண் டிவருண்டு நானுண் டெலாங்கொடுத்த
மருந்தெனுந் தோகை மலைமே லிருக்குஞ்சு வாமியுண்டே. ()

தலைவனைப் பாங்கி வரையுநா ளளவு,
நிலைபெற வாற்றிய நீர்மை வினுதல்.

நனவினு நீங்கில னெம்மா னுணையெந்தக் காலத்துமுன்
மனமிசை நீங்கிலம் யாமுமி தாக மயின்முருகன்
றனிமயில் வெற்பி லிவள்பாவை நோக்கிச் சலிப்பதுண்டே
பனநடை யைப்பிரிந் தெவ்வண்ண நீதுய ராற்றியதே. (௬௨௫)

மன்றன் மனைவரு செவிலிக் கிகுளை, அன்புற வுணர்த்தல்.

நாவும் விழைவும் வரவுங் கொடையுங் கதித்தமயிற்
றவு மயில்வெற்பு மாயின ரேயன்று தேடியுன்கால்
பாவுங் கிரியுஞ் சுரமும் புறவும் வருந்தச்செய்தார்
வு மணமும் பிரிதலுண் டோபெற்ற பூங்கொடியே. (௬௨௬)

வாழ்க்கைநன் றறைதல்.

விண்பார்த்த நோக்கி விசும்பு தொழுமயில் வெற்புடையான்
ண்பார்த் தொளிக்குஞ்சொன் மாறார் புணர்வேள் பதம்பணிவோ
ண்பார்த்த மங்கை யறிவையென் சொல்வது நன்குணவிற்
ண்பார்த்து மற்றவன் கைபார்த்து நிற்குஞ்சொற் கண்டிலனே. ()

மணமனைச் சென்று வந்த செவிலி,
பொற்றொடி கற்பியனற்றாய்க் குணர்த்தல்.

இசைந்திடுங் காலை முருகன் மயில்வரைக் கேகிவரும்
பசம்பெறு மானம் புரக்குஞ் சரவண வாவிகுடைந்
தசைந்த விருளூற் றறியாது சேருநண் பாதரிக்கும்
சுங்கொடிக் காரோ கருங்கொடிச் செய்கை பயிற்றியதே. ()

நன்மனை வாழ்க்கைத் தன்மை யுணர்த்தல்.

ம்மனை வாழ்க்கை யினுமவர் வாழ்க்கை நலங்கனிவா
நம்மனை யன்பிற் படுத்துஞ் செயல்கொடுக் குஞ்செயற்கெ
ம்மனைக் கல்லும் பகலுந் துயிலில்லை யாறுபெற்ற
ம்மனைப் போலு நிலைபெற்ற தோகைக் கனங்கிரிக்கே. (௬௨.௬)

அன்னவர் காத லறிவித்தல்

தா திருந்திலர் வேந்தரக் காலு முறநினைப்பார்
ரதே துணையில்வந்தாலும் வருவர் துயர்தவின்றி
ரதேயித் தியாதி பிரிவினுஞ் சேந்தன் மயில்வரைமான்
வதாந் தியர்மனம் போல்வே றுருதெய்வம் வேண்டிலளே. ()

இல்வாழ்க்கை முற்றிற்று.

## இருபத்தேட்டாவது—பரத்தையிற்பிரிவு.

காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்,
கேதுவி தாயிவ் விறைவிக் கென்றல்.

மணிமாட வீதி மயில்வரை வேளை வணங்கிலர்போற்
றுணியா தனதுணிந் தேகினர் மாவென்று சொல்லவுற்று
ரணியார்நறுங்கொங்கையாற்றுங்கொல்லோவன்பில்லாயிழையார்
பணிமே விருந்தங் கருடனை யேவிட்ட பாவத்தையே. (௬௱௧)

தனித்துழி யிறைவி துனித்தழு திரங்கல்.

காட்டைவி டாதுபின் னாட்டைவி டாது கலந்தவுயிர்
கூட்டைவிட் டோடிற்றை யோவெனைப் போக்பவர் கூறினுண்டோ
சூட்டு மயில்வரை யாரரு ளிதெனிற் சொல்வதென்னே
வீட்டில் விருப்பறத் தாரோ பரத்தை விரும்பினரே. (௬௱௨)

ஈங்கிது வென்னெனப் பாங்கி வினுதல்.

தேன்காணும்பூம்பொழிற்செவ்வேண்மயில்வெற்பிற்சேயிழையுன்
மான்காணு மைக்கண்ணுங் கொங்கையுங் காண மலரணைநீ
தான்காணு மந்தப் புரம்பலர் காணச் சரிக்கிலிது
நான்காணத் தக்கது வோசொல்க சொல்க நறுநுதலே. (௬௱௩)

இறைமகன் புறத்தொழுக் கிறைமக ளுணர்த்தல்.

கொண்டு கழித்தன வாமேறுங் குகன்மயிற் குன்றிடத்தே
வண்டு கழித்த மலர்களுண் டேயிந்த மானகரா
ருண்டு கழித்த கலமென்றெண் ணாரிறை யோர்பலருங்
கண்டு கழித்த குடந்தேடிச் சூளையைக் காத்தனரே. (௬௱௪)

தலைவியைப் பாங்கி கழறல்.

ஆனுலும் பட்சியை வாவிதன் னாதடி யார்பதவி
மேனுறு மெய்த வருள்வோன் மயில்வெற்பர் வேண்டினர்பற்
றேனுலுங் கன்னல்விட் டோலையுண் ணுங்கரித் தேசத்திறா
போனுலும் போவதுண் டோமனத் தாசையும் போகுமே. ()

தலைவி, செவ்வணி யணிந்து சேடியை விடுத்தல்.

குருட்டின ராளைகண் டாலன்ன பன்மதுக் கொள்கையுள்ளோர்
மருட்டினை நீக்கு முருகன் மயூர வரையையன்று
டிருட்டினர் சென்றிடுஞ் சேரியிற் செல்கெனச் சேடிமின்று
ரிருட்டினிற் செவ்வ லரிபலர் காண வெழுந்ததுவே. (௬௱௫)

அவ்வணி யுழையர்கண் டழுங்கிக் கூறல்.

பாய்காய்க்குந் தோளுடை மாயன் மருகன் பணிந்தவர்க்குத்
தாய்காய்க்கு மன்பன் மயில்வரை மேவிய தையனல்லார்
நோய்காய்க்கு மாசையி னாலே விடுத்தனர் நொய்யபிள்ளைக்
காய்காய்க்கும் பூவைக் கனிகாய்க்கக் காட்டல் கருத்தல்லவே. ()

பரத்தையர் கண்டு பழித்தல்.

சேவேற் றிடுங்கொடி யார்பணி யார்க்குத் திருக்கொடியார்
கோவேற்ற பிள்ளை குமரன் மயில்வரைக் கொம்பனையார்
காவேற்ற பூங்குழன் மேனு ணைறிந்திக் கடைத்தெருவிற்
பூவேற்ற தன்பருள் வானை மருவப் புரிந்ததுவே. (௪௩௮)

பரத்தைய, ருலகிய னோக்கி விடுத்தல்.

பரத்தையிச் சித்தவர் வீட்டையு றென்ற பான்மைதப்பி
வரத்தை யுதவினம் வேண்மயில் வெற்பர் மகிழிறைவா
வுரத்த களிறு மலையூடு போய்த்தரு வுற்றொடித்துத்
திருத்தகு பூஞ்சுனை யாடியுந் தன்பிடி சேர்ந்திடுமே. (௪௩௯)

தலைவன், வரவுகண் டுவந்து வாயில்கண் மொழிதல்.

காத்தெனைச்சிந்தையிலெண்ணியநான்கையுங்கைக்கொடுத்தோன்
சேத்தரு வாரு மயில்வரை யார்சிந்தை சீரிதன்றோ
ஆர்த்தனை நீத்தனர் பன்னிரு நான்வரை துய்க்கவல்லி
பூத்தது பார்த்துவந் தார்வடி நீங்கிப் புறநகரோ. (௪௪௦)

வரவுணர் பாங்கி யரிவைக் குணர்த்தல்.

வாய்க்காற் புனன்மறு வாய்மடை பாய்ந்து வரினுந்தலை
சாய்க்காது செந்நெ லதனுல் வெருநலந் தான்பெற்றதாற்
சேய்க்காசை யுள்ள மயில்வெற்பர் வந்தனர் சென்றெதிர்வாய்
தாய்க்கா னதுபிள்ளைக் குண்டேமன் னர்க்குச் சகசமதே. (௪௪௧)

முதிரா மென்முலை யெதிர்கொண்டு பணிதல்.

கண்ணுக்குங் கைக்கும் பகைவருமோசெங்கைகண்ணிற்பட்டால்
விண்ணுக்குப்பாதையெனும்வேண்மயில்வெற்பர் வேற்றுமையோ
பெண்ணுக்குப் பேயு மிரங்குமென் பாரிவர் பேரறிவா [றே.
மெண்ணுக்கென் னேசொல்வதின்பமொன் றேயுயிரென்பதொன்

புணர்ச்சியின் மகிழ்தல்.

பிரம்பப் பசித்தவர் சோறுண்டல் போல திருபர்துய்த்தார்
குரும்பை முலையுந்தண் ணீர்த்தாக முற்றவர் கொள்கைபெற்றாள்
விரும்பிய சேந்தன் மயில்வரை யாளொரு மிக்குப்பெற்றாள்
கரும்புகட் டாக வெறும்பு வருமென் கதைப்படியே. (௪௪௩)

இதுவும் அடுத்தகவியும் தலைவிகூற்று.

தாமக்கிழத்தி, நீத்தமை பொருது நின்றுகிழ வோனைப் பழித்தல்.

அன்றிலன் னொரு முளர்பாரி னம்மன்ன ரட்டையன்று
ரென்றுசொல் வாளு மொருத்தியன் றேவவ ளென்னின்மிக்காள்
குன்றக் குடிக்குமரேசன் பதமலர் கூடிலர்போற்
கன்றி வெகுண்டுசொல் லாதது சொல்லுங் கருத்தெண்ணிலே. ()

அவனோடு, பாங்கோடு பரத்தையைப் பழித்தல்.

அருளை விரும்பி மறவாத வென்னை யகன்றுசென்றார்
பொருளை விரும்பி மறப்பார் விரும்பப் புகுதல்செய்தார்
முருகன் மயில்வரை யாரன் பவர்மிசை மூற்றுங்கொல்லோ
விருவரும் பொய்யன் பினரன்றி யில்லை யியம்புதற்கே. (௪௪௫)

(காமக்கிழத்தி) மனைவியைப் பழித்தல்.

வந்தார் மறந்தனண் முன்செயல் யாவு மறித்துமங்கே
பிந்தா ரதற்கும் பெருமூச் செறிந்தனள் பேதையிவ
டந்தா வளத்தை விலங்கிடு வாரிற் றடைபுரியா
ளெந்தோ விவள்செய்கை வேண்மயில் வெற்பி லிருப்பவரே. ()

பரத்தையர் காதற் பரத்தையைப் புகழ்தல்.

வாராது வந்த மறிமானை நீக்கி மனையயலா
டாராத வானைக் கொருபிடி யாகுநஞ் சாதிமின்னாள்
பாரா ளவளொடும் வாழ்தனம் வாழ்க்கையின் பண்பையன்றோ
சீராரும் வேலன் முருகன் மயூரச் சிலம்பிடத்தே. (௪௪௭)

(பரத்தையர்) தம்மையிகழ்தல்.

தீராத நெஞ்சுக்கு தெய்வந் துணையென்று செப்புமொழி
தாராள மாயின தெங்களுக் கோவவர் தங்களுக்கோ
வாராரைச் சீறி வருவாரைத் தேடி மதர்த்தெழுந்தாய்
பாரா ருனைக்கொங்கை யேருகன் றேகைப் பருப்பதத்தே. ()

(பரத்தையர்) கிழவோன் றன்னையும் பழித்தல்.

மின்றகு நுண்ணிடை யார்குண மாறிடை வேசைகுண
மென்ற தவர்க்கு வராதே நடந்துகொ ளின்பமென்றோ
மன்றன் முருகன் மயில்வரை சென்று வருமிறைவா
வொன்று மறிவினர் மேலே நடந்தன வுன்புத்தியே. (௪௪௯)

(பரத்தையர்) தம்மை (த்தாமே) புகழ்தல்.

மின்னென மாதர் பயிலுங் குகன்மயில் வெற்பவரே
பொன்னனை யாளுமப் பாவையு நங்குலப் பூவையராம்
பன்னுவ தென்னவர் கற்பிற்கு வெஞ்சொற் பகர்தற்கன்றோ
மன்னு முலகொரு நூலைக் குறளென்று மாற்றியதே. (௪௫௦)

### வெள்ளணி யணிந்து விடுத்தல்.

மதுமலர்ச் சோலை யுதிர்மலர் சோதி மதியமுத்த
முதிர்வன போலு முருகன் மயில்வரை யொண்டொடியார்
கதுமென வெள்ளைத் துகிலுமுத் தாரமுங் காட்டிவெள்ளைப்
புதுமலர் சூடிப் பழமலர்ப் பேர்சொல்லிப் போந்தனரே. (௪௫௧)

### புள்ளணி, மாலைவே லண்ணல் வாயில் வேண்டல்.

ஆயிர கோடி யுடுவுதிர்ந் தாலென்ன வார்த்தகவி
பாய மலருகும் பூஞ்சோலைத் தோகைப் பருப்பதத்தார்
தாயினு மன்ப ரருளுண்டு மானருள் சற்றுமுண்டு
சேயின னென்றணி ரண்மைய னாயினன் செப்புகவே. (௪௫௨)

### தலைவிநெய் யாடிய திகுளை சாற்றல்.

தருவார்த்தை யின்றி மறுவார்த்தை பேசிற் றையயிலரைப்
பொருள்வார்த்தைக் காவி சுமவார் நிகரென்று பொய்மறந்தீர்
மருவாற் றிகழ்குகன் மாயூர வெற்பின் மடந்தைக்கென்சொற்
குருவார்த்தை யோபெற்ற பாலனெய் யாடிக் குளித்ததுண்டே. ()

### தலைவன் றன்மனத் துவகை கூர்தல்.

அனைக்குமுன் னேதந்தை யார்க்குமுன் னேபெற்ற வையனன்பர்
தனைக்குமுன் னேவருஞ் சேந்தன் மயில்வரைத் தையனல்லாண்
மனைக்குமுன் னேபெற்ற வான்கன்று தூக்கியென் றோமகிழ்
மெனக்குமுன் னேயிரு பாற்குடந் தாங்கி யெதிர்கொள்வதே. ()

### தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றல்.

தாசானு தாச ரெனத்தேவர் வந்தடி தாழ்ந்துசிவ
பூசா விதிசெயுஞ் சேந்தன் மயில்வெற்பர் பூங்கொடியுன்
பேசாத பிள்ளையைப் பேசுவிக் கும்பிள்ளை பேரிடவுன்
னாசார வாசலுற் றூரறி யேனுன் னருளுள்ளமே. (௪௫௫)

### தலைவி புணர்ந்து தலைவனோடு புலத்தல்.

பூவென்ற சோலை புவிமே லுடுக்கணம் பூத்ததென
மீவென் றெழுகுகன் றோகைவெற் பீரன்பு வேண்டிவந்தீர்
மாவென்ற கண்ணார் முலைப்பான் மணப்பவ ரென்றிடினுங்
கோவென் றவரென்ன மோவிழி யாமை குறித்தனரே. (௪௫௬)

### பெரியோன், விடுத்துழிப் பாங்கி வாயில் மறுத்தல்.

விண்கா வுறைமந்தி மேனோக்கிப் பாய விரிந்தகனித்
தண்கா வளந்திகழ் வேலன் மயில்வரைத் தையனல்லாய்
மண்பா னடைகொண் டரையுடம் பாகி மதிமுடித்துப்
பெண்பா லிசைந்தவர் வந்தாரென் றோதுதல் பேதைமையே. ()

பாணன் வாயில் மறுத்தல்.

இங்கே யிறையவர் வந்தார் புறத்தொழுக் கில்லையென்று
சிங்காரம் பேசினை வேலன் மயூரச் சிலம்பண்ணலா
ரங்கே யிருக்க வவளோ விவளென்னு மப்பதத்திற்
சங்கீதம் பாடினை யாமே பொய்ப் பாணர் தருமநன்றே. (சுரு அ)

பாணன் கூற்று.

வல்லென்ற கொங்கைமின் னேகுகன் றோகை மயில்வெற்பிலே
கொல்லென் றயலவர் கூடின ரேயவர் கூடவப்பாற்
செல்லென்ற போதிடி யுற்றதொத் தேன்சினந் தேபெறுப்பேன்
கல்லென் றணைபடி யாதிருந் தேனருள் காண்பதென்றே. (சுருகூ)

விறலி, வாயில் மறுத்தல்.

பண்ணுஞ் சுரமும் பயின்றிடுங் காலம் பயின்றனமு
னண்ணுஞ் சுரமு மொழியு மறந்தனர் நாளுக்குநாட்
கண்ணுமில் லோமிரு காதுமில் லோமிரு கையுமில்லோம்
பெண்ணுமில் லோம்விற லீகந்தன் றோகைப் பிறங்கலிலே. (சுசு0)

கூத்தர் வாயில் மறுத்தல்.

ஆடிய காலுஞ்சொற் பாடு மிடறுமுள் ளார்கண்மிக்கா
மூட றவிர்த்தவர்க் காவன தேட லுறுதியென்றே
தேடு முருகன் மயில்வெறபர்க் கோதுமின் செப்புமென்போற்
கூடு நகைகொண்டு மேலா டியகழைக் கூத்தர்களே. (சுசுக)

விருந்தோடு வந்துழிப் பொறுத்ததுகண், டிறையோன் மகிழ்தல்.

செருந்தொன்று கூந்த லினியென்செய் வாளன்பு சேரினமாம்
விருந்தொன்று வந்தது வென்றே குகன்மயில் வெற்பிலைது
பொருந்தென்று சொல்லு மினமே துணியெனும் புன்கணுக்கோர்
மருந்தென்று தேறினிச் செவ்வா யமுத மருந்தல்லவே. (சுசு௨)

இறைமகள் விருந்துகண், டொளித்த வூடல்வெளிப்பட நோக்கிச்,
சீறேலென்றவள் சீறடி தொழல்.

பஞ்சனை மேலஞ்சிச் செல்கின்ற காலைப் பருத்தடக்கை
வெஞ்சின வேழத்தின் மேற்சிலம் பார்த்தன வோர்த்துவிம்மித்
துஞ்சினர் போலு மினம்பிடி பஞ்சடி தொட்டலன்றே
கஞ்சமுந் தீன்றன செவ்வேண் மயூரக் கனங்கிரித்தே. (சுசுங)

இஃ, தெங்கையர் காணி னன்றன் றென்றல்.

வேலை விரும்பினர் புன்றொழிற் செய்தல் விதிதமன்றே
மாலுடை யாரென வந்தனை தோகை மயிற்குமரன்
சோலை மயில்வெற்பின் மன்னவ னேசிறுத் தொண்டனென்னக்
காலை முடித்தனை யெங்கையர் காணிற் கலங்குவரே. (சுசுச)

அங்கவர் யாரையு மறியே னென்றல்.

மிஞ்சுமென் றால்வினைக் காரர் பதம்விழில் வெஞ்சினம்போய்
நெஞ்சு குழைவரென் பார்கண்டி லேன்பர னோர்குவரோ
பஞ்சணை மேற்படுப் பார்குகன் றணிகைப் பருப்பதத்தே
கஞ்சத் துத் தண்ணீர் கலிங்கத்துப் பாய்ச்சல் கருணையன்றே. ()

காமக் கிழத்தியைக் கண்டமை பகர்தல்.

வள்ளல்ச மாலி யுடையண பாண்டியன் வாழச்செய்த
வெள்ளி மயிலி லெழுந்தருள் வோன்மயில் வெற்பினிலோர்
கள்ளியுன் றாய்தலை மேற்கையு நின்மிசைக் கண்களுமாய்
மெள்ள நகைத்தது ங் கண்டேனுன் வீட்டிலென் மேல்வைப்பிலே.

தாமக் குழலியைப் பாங்கி தணித்தல்.

தேறாத செல்வ முருகன் மயில்வரைச் செல்வனுன்பாற்
கூறா தனசொல்லிச் செய்யா தனசெய்துங் கோபமென்னே
மாறான் மகிழுந் திருமகிழ்ந் தாளின்பம் வாய்த்தபதி
னாறா யிரரன்றி யோர்மானெஞ் சேறி யமர்ந்ததுவே. (சசுஎ)

தணியா ளாகத் தலைமக னூடல்.

சிற்றுளி கற்பிளந் தாலன்ன பின்சொற் சிறந்தனவென்
பற்றுரை சேற்றிடைக் கம்பத்தை நேர்ந்ததென் பாவமிதே
கற்றை யழற்சடை யான்மகன் றணிகைக் கனங்கிரிமே
லற்றைப் புனச்சுக மன்றோநம் வீடுற்ற வஞ்சகமே. (சசுஅ)

அணிவளைப் பாங்கி யன்பிலை கொடியையென்,
றிணர்த்தார் மார்பனை யிகழ்தல்.

தலைநா ளிடைச்சின மெய்குழைத் தீரயிற் சாமிமயின்
மலைமாதர் முந்தி வரிக்கிலன் பேது மலிந்துதின்றாற்
பலநாட் கரும்புங் கசக்கு முறைமையன் றிப் பற்றையில்லா
விலைமாத ரேவிலை யில்லாத மாதர் விரும்புகவே. (சசுகூ)

மகப்போறை கூர்ந்த வண்ண முரைத்தல்.

ஆகம வேத மடிதொழு தேத்துமை யாறுமுகன்
றணிகை மலையில் விளையாடும் பொன்மயில் சூற்கொண்டநாண்
மேகங் கறுத்தது மின்னுந் துடித்தது வெப்பசந்த
பூக மலர்ந்தது தென்னையுங் காய்த்தது போர்மன்னனே. (சஎ0)

புரவலன் போந்து புதல்வனைக் காண்டல்.

சேனா பதிக்கம் விறல்வாகுக் கீந்துதன் செய்கையெல்லா
மானாத சங்கர லிங்கத் தபோநிதிக் காக்கியவே
டேனார் மயில்வெற்ப ரஞ்சனம் போட்டிலர் செங்கையிலே
பானாறு முன்சொற் பொருளொடுத் தார்பொன் பலகொடுத்தே. ()

புறங்காட்டல்.

ஆன்க ணொழுந்தடி யார்க்கு விடைதந் தருளுமெங்கள்
கோன்கண் மணியெனும் வேளுறை குன்றக் குடிமலைமேன்
மான்கண்ணி யேயின்பப் பாலு மமுதமும் வைத்துக்கொண்டு
தேன்குழ லீந்தனை காமப் பசியதிற் றீர்வதின்றே. (சஎஉ)

காமக்கிழத்தி வாயில்வேண்டல்.

வாக்குங் கிருதாக் கினிஞாய நீங்கு மதிச்சிலைபோ
லாக்கு மனத்தைக் கதிர்ச்சிலை ஞாய மழகதன்றாம்
பாக்கு மிளகு மலிகுகன் றேரைகைப் பருப்பதத்தாய்
தேக்கிலை நீரெனச் செய்வதென் போல்பவர் செய்வதுவே. (சஎ௩)

பாங்கி வாயில் நேர்வித்தல்.

தீத்தட்டு கல்லென்பர் மன்னனை மேல்வரு தென்றல்கண்ட
பூத்தவஞ் சிக்கொடி யாமென்பர் மாதனைப் போர்வயவர்
நீத்திடி லென்கண் டகபால ஞாயத்தை நேர்தனன்றாங்
காத்திகழ் தோகை மலைவேலன் வேலன்ன கட்குயிலே. (சஎச)

ஆயிழை மைந்தனு மாற்று மையுமே,
வாயிலாக வரவெதிர் கோடல்.

தேங்கமழ் சோலை மதுளையி லேபண்டு சென்றுசங்கந்
தாங்கிய சங்கை தவிர்த்தோன் மயில்வரைத் தாரண்ணலே
யீங்குனக் கென்றடை யாற்றுமை யும்பெற்ற வென்பின்னையு
மோங்கி லணைதழற் போலென் வெறுப்பை முடித்தனவே. (சஎரு)

மணந்தவன் போயபின் வந்த பாங்கியோ,
டிணங்கிய மைந்தனை யினிதிற் புகழ்தல்

மறுமார்க்கஞ் செய்தவெஞ் சூரா தியர்க்கு மயிற்குமுத்தி
யுறுசாபஞ் செய்த முருகன் மயில்வரை யொண்டொடியே
தறுகாப் புலிக்குட்டி வீரனன் றேபரி தானுமின்றிச்
சிறுதே ருருட்டிப் பெருந்தே ரனைப்பெண்மை சேர்த்தியதே. ()

தலைவனைப் புகழ்தல்.

பூவிற் கொடுக்குந் தொழில்கொடுப் போர்மெய்ப் புரவலர்க்குங்
காவற் செயலருள் வோர்மயில் வெற்புறை காரிகையே
பாவத்தை வாங்கித்தன் புண்ணியம் பாதி பகிர்ந்தளிக்குந்
தேவர்க்குக் கண்ணிமை யாதுகை நீங்கில சேக்கையினே. (சஎஎ)

சிலைநுதற்பாங்கி, மனைவியைப் புகழ்தல்.

பொருந்தின ரென்றபொழுதேமுன் கொண்டபொறுமையெல்லா
மருந்து கலந்த விடம்போ லொழிந்தன மாதவர்க
டிருந்திய வேலன் மயூர வரையினிற் சேயிழையே
யருந்துதி யென்னி னிகரோ வதுவு மருந்துதியே. (சஎஅ)

பாலனைப் பழித்தல்.

ஆதியி லாக்கிப் புசிப்பன யாவு மளித்தவன்பன்
பேத நினைந்திலன் சேந்தன் மயூரப் பிறங்கலிலே
தாதைகை யாடுந் தனக்குட நீபெறத் தக்கதன்றோ
வோதிய பாற்குடம் பிள்ளாய் விதியின் றுதவியதே. (௪௭௯)

பாத்தையிற் பிரிவு முற்றிற்று.

---

# இருபத்தொன்பதாவது—ஓதற்பிரிவு.

தலைவன்பிரிவறிவுறுத்தல்.

கைம்மலர் வாய்மலர் கண்மலர் காண்மலர் மெய்ம்மலர்த்து
மெய்ம்மலி நூலும் பிறவுங் குகன்மயில் வெற்பிடத்தே
பைம்மலி வேற்கண்ணி சந்தேக மாற்ற மனநினைந்தோ
நெய்ம்மலி கூந்த லிளம்பிடிக் கேசென்று நீசொல்கவே. (௪௮௦)

பாங்கி தலைவிக்கதனையறிவுறுத்தல்.

உதவி புரியுந் தலையாய நட்ப ருடல்சிதைத்தார்
பதயுக ளத்திற் கெதிரான தொன்றைப் படுத்தல்செய்தா
ரிதமகி தஞ்செயு நண்பர் மனமறி யேன்முருகன்
மதிதவழ் தோகை மலைநா வலர்பலர் வந்தனரே. (௪௮௧)

பிரிவுடன் படாமை.

தலையாய நட்ப ருடல்சிதைத் தாரென்ற சாடைநன்று
நிலையா கியநம் முனடநட்பி லாவதென் னேரிழையே
பலதேவர் போற்று முருகன் மயில்வெற்பிற் பண்ணறியுஞ்
சிலையா ருரைபண் ணிருதெய்வ மாகிச் செறிந்ததுவே. (௪௮௨)

பிரிவுடன் படுத்தல்.

மனத்தின் படிவிடு லீலா சுகர்கதை மற்றறிவாய்
விளிக்கை யிசைபசுப் பேய்பாம்பு பாலன் வெறுப்பதுண்டோ
வினத்த விசைத்தெய்வ மேழி லிரண்டை யெழுறெரியார்
கனைத்துவண் டார்சுனை வேண்மயில் வெற்பிற்பண் கற்பவரே. ()

பிரிவுடன் படுதல்.

தாரமு நல்ல கிளையும் புகுவார் தடையி னில்லார்
தீர ரகப்பொருள் வாசிப்ப தேநன்று சேந்தன்மயி
லலர்கொண் மலையி லலங்காரம் பாரா திருவருநம்
மூரிற் புறப்பொருண் மேற்கற் பியனெறி யுன்னுவமே. (௪௮௪)

## பிரிவுழிக் கலங்கல், (கார்ப்பருவம்.)

பிள்ளையுந் தந்தையும் வந்தா ரெமது பெருங்கவினைக்
கொள்ளைகொண் டாரிருந் தார்நடந் தாரினிக் கூறியென்னும்
புள்ளி மயிற்குகன் ஹேகை மலையின்முன் பொற்பழிந்த
வெள்ளை முகிலுங் கறுத்தே யுருமி வெளிவந்ததே. (சஅரு)

## பாங்கி வன்புறை.

வீறிற் பிரிந்தனர் போகிலர் மாதம் விளங்குமுப்பத்
தாறிற் கழிந்தன கண்டுங் கலங்க லறிவின்மையாந்
தேறற் சிகிவரை வேலனை யுள்ளார் திறமெனவே
தூறித் திரியுமிக் காருக்கென் னேவுண்மை சொல்லுவதே. ()

## தலைவி வன்பொறை.

ஓதற் ககன்றோ ரொழிந்திடை மீண்டனன் புடன்கலந்து
போதற் கிசையப் புலம்பப் பெறுனம் புலம்ப லென்னுஞ்
சோதிக் குகன்மயில் வெற்பானை நொந்து சொலிற்றிரும்பி
வேதத்தினந்தத்தைப்பார்க்கினும்பார்க்குவன்வீண்பெண்மையே.

## தலைவன் வருவழிக் கலங்கல்.

வருடமொன் றாகி யொருவரு டத்தை மகிழ்ந்தளியே
னொருவ ருடச்செய லாலோர் வருடத்தை யோட்டுகின்றேன்
முருகன் மயில்வெற்பி லோர்வரு டத்தின் முயற்சிதருங்
கருமுகி லாண்டொன்றை யோராண்ட தாகக் கருதிலவே.(சஅஅ)

## வந்துழி மகிழ்ச்சி.

நான்சே ரெழுத்தொடு சொற்பொருள் யாப்பு நயக்குமணி
மீன்சேர்கண் ணணல்குஞ் சேந்தன் குகன்மயில் வெற்பகத்தே
வான்சேர் நெறியென்ப போய்மீ ளளவுமென் மாணங்கொண்ட
கான்சேர் குழற்கு நிகரோ வுலகுள்ள கற்பவரே. (சஅகூ)

ஓதற்பிரிவு முற்றிற்று.

## முப்பதாவது—காவற்பிரிவு.

## தலைவன் பிரிவறிவுறுத்தல்.

ஒன்றாகி முப்பத் திரண்டா மறத்திற் குறுகுறையு
நன்றாய தேசத்து நீதியு நாட்டிடை நாடமைதி
யென்றாய செல்வ முதலா னவுமவற் றெய்துகுற்ற
மன்றாக் கதுங்குகன் ஹேரன்வெற் பார்பவர்க் காய்தலுண்டே.()

## பாங்கி தலைவிக்கறிவுறுத்தல்.

வேத முனிவரர் யாகக் குறைகளும் வேண்டிநின்றோர்க்
கோதிய தேயந் தியாகக் குறைகளு மூர்பலவின்
றீது பலவுந் தவிரக் குகன்மயிற் றிண்சிலம்பார்
காதன் மடக்கொடி யேநடந் தாரென்பர் கண்டவரே. (௬௬௧)

## தலைவி பிரிவுடன் படாமை.

தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற் றலைமையருக்
கென்குற்ற மென்ற குறளறி வார்குற்ற மிங்ககற்றூர்
நன்குற்ற சேந்தன் மயில்வரை வேலவர் நாடுகொண்டாற்
பின்குற்ற முள்ளவர் காடுகொள் வாரினிப் பேசலென்னே. (௬௬௨)

## பாங்கி தலைவியைப் பிரிவுடன் படுத்தல்.

சீவகன் றந்தை முயற்சியை நீத்த செயலிலன்றே
பூவல யத்தைப் புரப்பது விண்டனன் பொற்கொடியே
தேவன் மயில்வெற்பிற் றன்வீடு காக்குந் திறமிலனூர்
காவல ரென்பதெ னென்றோத னல்ல கருத்தல்லவே. (௬௬௩)

## தலைவி பிரிவுடன் படுதல்.

பல்லார் பயன்றுய்ப்பத் தானே வருந்திப் பகிர்ந்தளித்த
னல்லாண் மகற்குக் கடனென்று நாலடி யார்நவின்றூ
ரெல்லாரும் வாழும் பிரிவிற் கிரங்கலுண் டோதமிழின்
சொல்லார் பிரிவல்ல வேகந்தன் றோகைச் சுரும்பிடத்தே. (௬௬௪)

## தலைவனைப் பிரிவுழிக் கலங்கல் (கூதிர்.)

கூடு பதமுந் தலையு முடலுங் குவித்ததிர்ந்து
மேடைக டாவி விழிசாய்த் திறகு விரிக்குமயி
ளூடர் குகன்மயில் வெற்பேறி யாங்க ணடுங்கவந்த
வாடை யெனும்புலி யாவிகொள் ளாமுனம் வந்திலரே. (௬௬௫)

## பாங்கி வன்புறை.

கார்வாடை நோக்கி மயிலாடுஞ் சோலைக்கன் ளூடர்மன்னன்
றேர்வாடை வந்துன் பாவாடைச் சோர்வினைத் தீர்க்கவின்றே
பார்வாடை யாலொழிந் தார்குகன் றோகை யணிவரைமுந்
நீர்வாடி வற்றுங்கொல் லோசிகி மைக்க னெருப்பினுக்கே. (௬௬௬)

## தலைவி வன்பொறை.

தூறுந்துளி வாடையும் பல்லறை யோசைக் குளிருமயி
னறுங்கிரி வேலைப் பணியா தவரி னடுநடுக்கும்
பறும்புனம்போலுமுடலுங்கொண்டென்பொறைவைப்பினன்றோ
தெறும்படை வேல ரறப்புறங் காவல் செலுத்துவதே. (௬௬௭)

தலைவன் வருவழிக் கலங்கல்.

வஞ்சிக் கொடிதலை சாய்ப்பதுண் டேவரும் வாடைகளே
யஞ்சினு மாடை பறிப்பீர்க ளோகள்ள ரானவர்போன்
மஞ்சு தணிமயில் வெற்புறை வேலை வணங்கினர்போற்
கொஞ்சி வணங்கி யொதுங்கித் துவண்டென்று கூடுவதே. (சுகூஅ)

வந்துழி மகிழ்ச்சி.

உரைப்பீர் தழற்படு பூம்பாவை போல்பவ ருக்கின்றுநா
மரப்பாவை போல வருதலை யென்றனம் வந்துசொல்லார்
கருப்பாண்மை தீர்த்த முருகன் மயில்வெற்பிற் கண்ணெனவே
யிருப்பாரைக் காணப் படாரே மகிழ்ச்சி யிராதவரே. (சுகூகூ)

காவற் பிரிவு முற்றிற்று.

---

## முப்பத்தோன்றாவது—தூதிற்பிரிவு.

இறைவன் பாங்கிக்குப் பிரிவறிவுறுத்தல்.

இருவ ரெதிர்ந்தனர் யாதினு மொப்புமை யேற்றவர்நந்
திருவ ரதுநிற்க நம்மினத் தாரெனுந் தேற்றத்தினு
லொருவரிற் சேரப் படாது குகன்மயி லோங்கலன்னீர்
பொருதக ரத்துணை யிரெழுத் தாகப் புரிந்தனமே. (ரு௦௦)

பாங்கி தலைவிக் கஃதறி வுறுத்தல்.

உய்த்த கயங்களொன் றோடொன்று தாக்கி யுலைதல்கண்டு
கத்தி யுருவி நடந்தார்பல் வேந்தர் கடம்பணிவோன்
முத்தி தருமயில் வெற்பினி னம்மிறை முன்னடந்தார்
மத்தகஞ் சாய்க்க விலக்கின ரென்றனர் வந்தவரே. (ரு௦க)

தலைவி பிரிவுடன்படாமை.

பன்னாளும் விட்டுப் பிரியா திருந்தமை பார்த்துமையோ
முன்னே பிரிந்தனர் பின்னே பிரிந்தார் முருகனன்ப
ரெந்நாளுந் தோகை மலையிற் பிரிவே யிசைத்தலையேற்
சொன்னாலுஞ் சொல்லா விடினுநன் றேயிந்தச் சொல்லெனக்கே.

தலைவியைப் பாங்கி பிரிவுடன்படுத்தல்.

தூதா னவர்நல்ல பாக்கினைச் சோற்றினைத் துய்க்கவுநா
மாதே வருந்த விதியோ முருகன் மயூரவெற்பின்
மீதே நமக்கொரு தூதில்லை யோசெயல் வேறிலையோ
பேதாய்செங் கையொடு காலில்லை யோவிப் பெருநிலத்தே. ()

தலைவி பிரிவுடன் படுதல்.

ஆண்டிருந் தான்மண மின்னுஞ்செய் வார்திங்க ளாறிருந்தான்
மூண்டமு தங்கொணர்ந் தேயளிப் பார்மதி மூன்றிருந்தால்
வேண்டு வனகையி னூலூட்ட வேண்டுஞ்செவ் வேண்முருக
னீண்ட மயில்வெற்பிற் றிங்களொன் றேனுண்டு நேர்குவனே. ( )

தலைவனைத்தலைவி பிரிவுழிக்கலங்கல் (முன்பனி.)

அன்ப னிவனென் றனையக லான்பிரி யானென்றனை
யின்ப னிதயமெட் டோநாளென் றேதினை யெங்கள்குகன்
பொன்பணிக் கின்ற மயில்வரை மீதிற் புகன்மறையோர்
முன்பனிக் கால மகலுமென் றாரம் மொழிநிசமே. (௫௦௫)

பாங்கி வன்புறை.

கைச்சமு தாடு கொடுத்த திரண்டிற்குங் காணென்றது
மிச்சமர் நீக்கப் படாதோ வெனவுனக் கெய்தியதும்
பச்சை மயில்வரைச் சேந்தன்றைப் பூசப் பயிற்சியினு
லிச்சை பெறுமுன் பனிக்கால மென்பது மெண்ணுவரே. (௫௦௬)

தலைவி வன்பொறை

வீடுக டோறும் விருந்துண் டுருவரை வேண்டியுற்றார்
காடுக டோறுஞ் சிவரூப மாவதுங் காணுகிலா
ராடல் புரிகுகன் மாயூர வெற்பி னவர்மெத்தவோ
நீடு மொருத்தி யுயிர்மெத்த வோபுகழ் நேர்தனன்றே. (௫௦௭)

தூதுவதுவாகச் சென்றோ னவ்வினை நின்றுநீட் டித்துழிப்,
புலந்து புலம்பல்.

ஒழிந்தார் சமர்விருந் துண்டா ரிலைமுன் னுரைத்தவெல்லாங்
கழிந்தா ரவரென்னுங் கத்திகை நோக்குங் கடம்பணிவோன்
வழிந்தோடுதேறன்மயில்வெற்பையெண்ணுங்கண்மாரியென்னுஞ்
சுழிந்தோடு வாரியிற் றோணியை நேருஞ் சுகக்கிளியே. (௫௦௮)

இறைவன் வருவழிக் கலங்கல்.

போதந் தனங்கல்வி போமாதர் மேன்மனம் பூணிலிந்தத்
தூது புகாவிடிற் சுற்ற மிறைத்தன்மை சோருமன்றோ
நாதன் முருகன் மயில்வரை வாவி நளினங்களே
யோதி னளினங்க ளோயல்ல வேகரிந் துற்றதென்னே. (௫௦௯)

வந்துழி மகிழ்ச்சி (கண்டோர்கூற்று.)

வாட்பது மங்கலை மானென்னுங் கண்ணி வரல்குறித்துக்
கேட்பது சின்னமென் றாலு மகிழ்ந்தனள் கிட்டுகின்றோன்
மீட்ப துயிரையென் றாலு மகிழ்ந்தனன் மெய்தழுவிச்
சேட்படர் சோலை முருகன் மயூரச் சிலம்பிடத்தே. (௫௧௦)

தூதிற் பிரிவு முற்றிற்று.

## முப்பத்திரண்டாவது—துணைவயிற்பிரிவு.

### தலைவன் பாங்கிக்குப் பிரிவறிவுறுத்தல்.

வீரகண் டாமணிக் குப்புலித் தோலணை வேண்டுமென்னக்
காரக லாதமின் வேலன் மயில்வரைக் காரிகையாட்
கீர நறும்புன லிட்டோர் குருத்திற் கிடத்தவிழித்
தாரென்ன மன்னென்னப் போற்றி யிறந்தவ ராரென்னுமே. ()

### பாங்கி தலைவிக்குப் பிரிவறி வுறுத்தல்.

நேற்றுப் பிறைத்தமை கண்டாருன் போலு நெடியவெள்ளைக்
கீற்றுப் பிறைமருப் பானை யலங்கரிக் கின்றனர்போ
மாற்றுக் குதிரை பலவாறு சேனை மலிந்தவொற்றர்
கூற்றுக் கொருவரு மானுர் குகன்மயிற் குன்றிடத்தே. (நிசஉ)

### தலைவி பிரிவுடன் படாமை.

நாடு நமதன்று நஞ்செல வன்னவர் நல்கலின்று
பாடு படுதன்மண் ணுக்கும்பெண் ணுக்குமென் பாருலகோர்
தேடு குகன்மயில் வெற்பர் துணைமேற் செலவையெண்ணு
ருடலை நீக்கிலன் றேபக லோரை யுறுவதுவே. (நிசங)

### பாங்கி தலைவியைப் பிரிவுடன் படுத்தல்.

நட்டவர்க் கும்மடுத் தோர்க்குஞ் சகாய நடத்தினர்க்கும்
விட்டவர்க் குங்குறை யுண்டாகிற் செல்வது வேந்தர்செய்கை
யட்ட வயிற்குகன் றேகைவெற் பாய்கிளை யார்சிலையிற்
பட்டனர் பின்மறுப் பாரா ரனுப்புவர் பாவையரே. (நிசச)

### பிரிவுடன் படுதல்.

தொடைகொடு வாள்கைக் கொடுநீ றுதவுநற் சொற்கொடுகட்
கடைகொடு வாசச் சுருக்கொடென் றுணின்ற காரிகைநீ
விடைகொடு போதி மயில்வரை வேலவர் மீட்பரிவள்
கொடுகொடு வென்ன வெடுவெடு வென்றனை கொண்டனையே. ()

### தலைவன் பிரிவுழித் தலைவி கலங்கல் (பின்பனி.)

ஐந்து வகைச்சுற்ற மைங்குழு வோரெட் டமைதியுள்ளோர்
முந்தினர் கந்தன் மயில்வெற்ப ராலரண் முற்றினரா
மந்த நகருஞ் சிவக்குமுன் னேவெளுப் பானபுகை
யிந்த நகரம் வளைத்தலிற் பின்பனி யெய்தியதே. (நிசசு)

### பாங்கி வன்புறை.

அரண்முற் றினரென் பதனல் விடிய லமர்பனியால்
வெருவுற் றனைகுகன் மாயூர வெற்பர் விறலறியாய்
வருதற் குரிமையி லேணியுஞ் சிப்புங்கை மாற்றினராம்
பருதியிற் றேன்றுவ ரேற்செய்யு மோபின் பனிதுயரே. (நிசஎ)

தலைவி வன்பொறை.

உலகிய னோக்கி யிறைவர்க் கிரண்டிடை யூறுறுமென்
றலர்முலை மாதரு மெம்மனை மேவ வனுப்பினரே
யிலகயில் வேலன் மயில்வெற்பிற் றேவ ரிருவருக்கு
நிலவு விமானங் கொணர்வார் பொறுத்தற்கெ னேரிழையே. ()

துணை ஏதுவாகச், சென்றோ னவ்வினை நின்றுநீட் டித்துழிப்,

புலந்து பாசறைப் புலம்பல்.

குலமட மாதரிப் பாசறை மேல்வரல் கொள்கையன்றே
நிலைமை பலபட நேர்வர் பலர்சிலர் நேர்ந்திலரே
யலர்மலி சோலை மயில்வெற்பில் வேலனன் பாலளித்த
தலைமைத் தனித்துரை யேவரல் சென்று தனித்துரையே. (௫௧௯)

தலைவன் வருவழிக் கலங்கல்.

புகைக்கண் டுடனே யதிர்தர யார்க்கும் புறங்கொடுத்த
மிகைகண்டு வாழ்த்துங்கொல் லோமங்கையூடி வெகுளுங்கொலோ
பகைதணித் தற்குச்சென் றேனக லாத பசைமிகுந்தே
னகல்வதென் னஞ்சுக மேயிர வொன்றெனக் கஞ்சுகமே. ()

வந்துழி மகிழ்ச்சி.

எண்ணான் கிலக்கண முள்ளவ ரேயெரி யூட்டுமவ்வூர்ப்
பெண்ணோரென் போல்பவர்க்கவ்வா றுநன்றென்ற பேதைநெஞ்சந்
தண்ணகச் சேந்தன் மயில்வெற்பி லேவந்து சார்தனன்றும்
விண்ணோர் பணிப்பகை காமாக் கினிபற்றி வெந்ததுவே. (௫௨௧)

துணைவயிற் பிரிவு முற்றிற்று.

---

## முப்பத்துமூன்றாவது—பொருள்வயிற்பிரிவு.



தலைவன் பாங்கிக்குப் பிரிவுணர்த்தல்.

அக்கினிட் டோம மிறைசூயஞ் சொல்லய மேதமுதற்
றிருக்கபல் வேள்வியு நந்தம் புகழுந் துலங்குதற்கே
தக்கதுன் றக்குடி வேளருட் கொண்டு தருமமில்லா
மக்கள் பலர்கொள் பொருள்கூட்டல் வேதம் வகுத்ததுவே. ()

பாங்கி தலைவிக் கதனைப் பகர்தல்.

கருவேங்கை யாகிக் குறப்பிடி மேவும்வி சாகன்மிக்க
மருவேங்கு சோலை மயில்வரை நாடர் மகிழ்மயினீ
திருவேர்ங்கப் பெற்ற சிறுவேங்கைக்கேமணஞ்செய்யவெண்ணிப்
பெருவேங்கைத் தேடி வருவேங்கை போமென்று பேசினரே. ()

